# அக்னி

வேதாந்த சிரோமணி,

பிரமஸ்ரீ. K. இராஜகோபால சாஸ்திரிகள்

திக்பாலகர்கள் (அல்லது திக்பதிகள்) எட்டு என்று கொண்டது பிற்காலத்தில்தான். வேதத்தில் இந்திரன் அக்னி, வருணன் இம் மூவரும் அதிகமாக மிகப் பெரிய தெய்வங்களாகக் கூறப்பட்டிருப்பினும் திக்குகளுக்கு அதி தேவதையாகச் சொல்லப்படவில்லை. திக்குகளும் விதிக்குகளும் மட்டும் கூறப்பட்டிருக்கின்றன.

திக்பாலகர் என்பதற்கு முன் லோகபாலர் (உலகை நாற்புறமிருந்து காப்பவர்) என்ற சொல்லே மிகுதியாகக் கையாளப்பட்டிருக்கிறது. அதிலும் நான்கு லோக பாலர்களே தென்படுகின்றனர். ஆச்வலாயன க்ருஹ்ய சூத்திரத்தில் (1-11-2) பலிஹரணத்தில் இந்திரன் யமன் வருணன் ஸோமன் என்ற நான்கு திக்பதிகளையே காண்கிறோம்.

வைதிககர்மாக்களில் ஸோமன் குபேரனுக்குப் பதிலாக திக்பாலகராகக் கூறப்படுகிறான். சில இடங்களில் ஈசானனுக்குப் பதிலாகவும் கூறப்படுகிறான். ஸோமன் என்றால் சிவன் என்றும் பொருள் உண்டு. திக்பாலகராகச் சொல்லப்படும் ஸோமன் சந்திரன்தான் என்பது சில்பரத்னம் முதலிய நூல்களில் லக்ஷணம் கூறும் வகையில் உணரப்படுகிறது மனுஸ்மிருதியில் 5-96, 7-4, ஆகிய இரண்டு இடங்களில் திக்பாலகர்களைக் குறிக்கும்போது ஸோமன் என்றும், சந்திரன் என்றும் ஈசானருக்குப் பதிலாகத் தரப்பட்டிருக்கிறது.

காளிதாசனுடைய காவ்யங்களிலும் "செல்வம் படைத்த நான்கு திக்பதிகளையும் பொருட்படுத்தாமல் சிவனைக் கணவனாக அடைய பார்வதி விரும்புகிறாள்" என்றும் "தசரதன் யமன், குபேரன், இந்திரன் வருணன் இவர்களுக்கு நிகரான பாரத்தைத் தாங்குகிறான்" என்றும் அதிதி என்ற மகாராஜாவை வர்ணிக்கும்போது "இவன் ஐந்தாவது லோகபாலன்"

என்றும் இப்படிப் பல இடங்களில் நான்கு திக்பதிகளே கூறப்படுகின்றனர். இராமாயணம் அயோத்யாகாண்டம் நாராஜக சர்க்கத்தில் அரசன் தன் சீரிய நடத்தையால் யமன் குபேரன், இந்திரன், வருணன் இவர்களை அதிகரிக்கிருன் என்று நான்கு திக்பாலர்களே கூறப்படுகின்றனர்.

ஆனல் பிற்கால நூல்களில் திக்பாலகர்கள் எட்டு. அவர்களுடைய அம்சத்தால் அரசன் பிறக்கிருன் என்ற கொள்கை மிகவும் விரிவாகக் கூறப்படுகிறது. மனுஸ்மிருதியிலேயே 5-96, 7-4 இவ்விரண்டு இடங்களிலும் எட்டு திக்பாலகர்களுடைய தொடர்பு அரசனுக்கு எவ்வகையில் பொருந்துகிறது என்று விரித்துரைக்கப்படுகிறது. எட்டு திக்பதிகளில் குபேரன், ஈசானன் இவ்விருவர்களில் ஒருவருக்குப் பதிலாக ஸோமன் கூறப்படுகிருன். தென்கிழக்கு திக்கிற்கு அதிபதி அக்னி, தேவாலயங்களிலும் வீடுகளிலும் அக்னியைக்கொண்டு செய்யப் படும் சமையலுக்கு இடமான பாகசாலையை (சமையல் செய்யும் இடத்தை) தென்கிழக்கு மூலையில் அமைத்ததும் இதுபற்றியேயாகும். விசுவாநரன் என்பவன் தவமியற்றி கிருஹபதிஎன்ற அக்னியை மகனுகப்பெற்ருன். நாரதமுனிவர் பன்னிரண்டாவதுவயதில் இவன் இடிவிழுந்து இறப்பான் என்று விசுவாநரனிடம் கூறினுர். அக்னியும் குழந்தைப் பருவத்திலேயே சிவபெருமானைக் குறித்துத் தவமியற்ற ஆரம்பித்தான். எந்த நாளில் இடி விழுந்து இவன் இறப்பான் என்று நாரதர் கூறினுரோ அந்த நாளில் ஈசன் இந்திர உருவத்துடன் அக்னியின் முன்தோன்றி "யாது வரம் வேண்டும்'' என்று வினவினுர். அக்னி சிவனையன்றிப் பிறரிடம் யான் யாதும் விரும்பவில்லை என்று கூறவே இந்திரன் வேடத்திலிருந்த சிவன் சினந்தவர்போல வஜ்ரத்தைத் தூக்கிக்காட்டினுர், நடுங்கிய அக்னி சிவனைத் துதிக்கவே சிவபெருமான் தன்சுய ரூபத்துடன் காக்ஷியளித்து திக்பால பதவியையும் அவனுக்கு அருளினுன் என்று காசிகாண்டம் பதினைன்ரும் அத்தியாயம் கூறும். காசியில் அக்னி ஸ்தாபித்த லிங்கத்தை வழிபட்டவர்களுக்கு இடியினுல் பயமில்லை என்றும் கூறும். விசுவாநரனுடைய பிள்ளையாதலின் வைச்வாநரன் என்று அக்னிக்குப் பெயர்.

வேதத்தில்

"चत्वारि शृङ्गा त्रयो अस्य पादा द्वे शीर्षे सप्त हस्तासो अस्य''

என்று அக்னி வர்ணிக்கப்படுகிறார். (இவனுக்கு நான்கு கொம்புகள், மூன்று பாதங்கள், இரண்டு தலைகள் ஏழு கைகள்)
உத்தரகாரணம் 20 ஆம் படலத்தில்

मेषारूढं सप्तहस्तं ज्वालाकेशसमप्रभम् ।
सप्तजिह्वं चतुर्नेत्रं रक्तवस्त्राङ्गरागकम् ॥
घृतपात्रं तोमरं च व्यजनं शूलमेव च ।
शक्तिं खड्गं च खेटं च अग्निं ध्यायेद्विशेषतः ॥

ஏழுகை, ஏழுநாக்கு, நான்கு கண், சிவந்த ஆடை, பூச்சு, ஜ்வாலாகேசம் இவற்றையுடையவர் ஆட்டுவாஹனத்தில் ஏறியவர். நெய்ப்பாத்திரம், தோமரம், விசிறி, சூலம், சக்தி, கத்தி, கேடயம் இவற்றைத்தரித்தவராக அக்னியை தியானிக்கவேண்டும். அக்னி பகவானுக்கு ஏழு நாக்குகள் என்பது முண்டகோபநிஷத்தில் இரண்டாம் கண்டம் நான்காம் மந்திரத்தில் வருமாறு :-

काली कराली च मनोजवा च सुलोहिता या च सुधूम्रवर्णा ।
स्फुलिङ्गिनी विश्वरुची च देवी लेलायमाना इति सप्त जिह्वाः ॥

காளி, கராளி, மனோஜவா, ஸுலோஹிதா, தூம்ரவர்ணா, ஸ்புலிங்கினீ, விச்வருசி என்று ஏழு நாக்குகளுக்கும் பெயர். ஆனால் ஆகமங்களில் ஹிரண்யா, கனகா, ரக்தா, கிருஷ்ணா சுப்ரபா, அதிரக்தா, பஹுரூபா என்ற பெயர்கள் கூறப்பட்டிருக்கின்றன. இந்த ஏழு நாக்குகளின் நிறம்; பீஜமந்திரம்; வச்யம், ஸ்தம்பனம, ஆகர்ஷணம், வித்வேஷணம், மாரணம் முதலிய கர்மாக்களுக்கு எந்த எந்த நாக்குகளில் எந்த எந்த திரவியங்களை எந்த வகையாக ஹோமம் செய்யவேண்டும் என்ற முறை; குண்டத்தில் இருக்கும் அக்னியில் இந்த நாக்குகள் இருக்குமிடம் முதலியன சோமசம்புபத்ததி ( சமயதீக்ஷாவிதிபடலம் 50 to 63) முதலிய பத்ததிநூல்களில் விரிவாகக் காணலாம்.

பஞ்ச பூதங்களில் ஒருவனாகிய அக்னி சிவபெருமானுடைய அஷ்டமூர்த்திகளில் ஒருவனாகவும் இருக்கிறான். அக்னி சிவபெருமானுக்கு சரீரமாக மட்டும் கூறப்படவில்லை. வீர்யமாகவும் கண்ணாகவும் சொல்லப்பட்டிருக்கிறான்.

कृशानुरेताः सर्वज्ञो धूर्जटिर्नीललोहितः ।

என்ற நாமலிங்கானுசாஸனம் சிவபெருமானுடைய பெயர்களில் கிருசானு ரேதா: என்று கூறுவதும் கவனிக்கத்தக்கது.

अग्ने त्वमैश्वरं तेजः पावनं परमं यतः ।
तस्मात्त्वेदीयहृत्पद्मे संस्थाप्य तर्पयाम्यहम् ॥

என்ற ஆகமவாக்கியமும் அக்னி சிவபெருமானின் வீர்யம் என்பதை உணர்த்தும். (கிருசானு - அக்னி) மேலும் அக்னிபகவான் தேவர்களுக்கு முகமாகவும் (வாயாக) கூறப்படுகிருன். ஆதலால் தான் வேள்விகளில் அக்னியில் போடப்படும் ஹவிசு தேவர்களின் வாயில் போடப்படுவதாகக் கருதப்படுகிறது.

குமாரசம்பவத்தில் தாரகாசுரனுல் துன்பமடைந்த தேவர்கள் பிர்மதேவனிடம் சென்று தாங்கள் படும் கஷ்டத்தை எடுத்துச் சொல்லும்பொழுது, "வேள்விகளில் முறைப்படி யஜமானர்களால் போடப்பட்ட ஹவிசை நாங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மாயாவியான தாரகன் அக்னியாகிய எங்களுடைய வாயிலிருந்து பிடுங்கிக்கொள்கிருன்" என்று காளிதாசன் கூறுவதும் கவனிக்கத்தக்கது. ஹவ்யத்தை (தேவர்களுக்குக் கொடுக்கப்படும் அவிப்பொருளை) தேவர்களுக்குச் சேர்ப்பதாலேயே அக்னிக்கு ஹவ்யவாஹன் என்ற பெயர். ஹவ்யத்தை (பிதிர்களுக்குக் கொடுக்கப்படும் பொருளை) சுமந்து சென்று பிதிர்க்களிடம் சேர்ப்பதால் கவ்யவாஹன் என்ற பெயரும் உண்டு.

அக்னிக்கு ஸ்வாஹா, ஸ்வதா என்ற இரண்டு மனைவிகள் உண்டு. ஒருசமயம் தேவர்கள் உணவை வேண்டி விஷ்ணுவை வேண்டினர். திருமால் தன்னுடைய ஒரு அம்சத்தால் வேள்வியாகத் தோன்றினர். அந்த வேள்வியில் அக்னிபகவானிடம் போடப்பட்ட ஹவிசு தேவர்களை அடையவில்லை- திருமாலின் கட்டளைப்படி தேவர்கள் மூலப்பிரகிருதியை வேண்டினர். மூல பிரகிருதியின் அம்சத்தால் ஸ்வாஹாதேவி தோன்றினள். அவளை அக்னிபகவான் மணந்து தேவர்களுக்கு ஹவிசைக் கொண்டு செல்லக்கூடிய சக்தியையும் பெற்ருர். அதனல் தேவர்களுக்கு ஹவிசு கொடுக்கும்பொழுது ஸ்வாஹா என்று சொல்லியே கொடுக்கவேண்டும் என்று (தேவிபாகவதம் ஸ்கந்த-9 அத்தியாயம் - 43) கூறுகிறது. (தொடரும்).

# அக்னி

வேதாந்த சிரோமணி,

பிர்மஸ்ரீ. K. இராஜகோபால சாஸ்திரிகள்

( மலர் 29, இதழ் 7, பக்கம் 377 இன் தொடர்ச்சி )

அதேமாதிரி பிதிர்க்கள் உணவை வேண்டினர். திருமால் ஒருஅம்சத்தால் வேள்வியாகத் தோன்றவும், அவ்வேள்வியிலும் அக்கினியில் போடப்பட்ட கவ்யத்தை பிதிர்கள அடைய முடியவில்லை. பிறகு விஷ்ணுவின் கட்டளைப்படி மூலப்பிரகிருதியின் அம்சத்தால் ஸ்வதா தேவி தோன்றினள். அவளை அக்னி பகவான் மணந்துகொண்டு பிதிர்க்களுக்கு கவ்யத்தைக் கொண்டு கொடுக்கும் சக்தியைப் பெற்றார். ஆதலால் பிதிர்க்களுக்கு கவ்யத்தைக் கொடுக்கும்பொழுது ஸ்வதா என்று சொல்லிக் கொடுக்கவேண்டும் என்று தேவீ பாகவதம் ஸ்கந்தம் ஒன்பதில் 44 ஆவது அத்யாயத்தில் கூறப்பட்டிருக்கிறது.

அக்னி விசுவாநரனுக்குப் பிள்ளை; ஆதலின் வைச்வாநரன் என்று பெயருள்ளவன் என்று காசிகாண்டம் கூறினபோதிலும் வேதம் விராட் புருஷனுடைய முகத்தினின்றும் அக்னியும் இந்திரனும் தோன்றியதாக मुखादिन्द्रश्चाग्निश्च என்ற வாக்கியத்தால் உணர்த்தும்.

அக்னிக்கு ஸ்வாஹாதேவியிடம் தக்ஷிணாக்னி, கார்கபத்யாக்னி, ஆஹவனீயாக்னி என்ற மூன்று பிள்ளைகள் உண்டாயினர் என்று தேவீபாகவதம் கூறும், வைதிகர்கள் செய்யும் வேள்விகளில் தக்ஷிணக்கினி கார்ஹபத்யாக்னி, ஆஹவனீயாக்னி ஆகிய மூன்று அக்னிகளே பயன்படுகின்றன சில சமயங்களில் சிலருக்கு மட்டும் ஸப்யம், ஆவஸத்யம் என்ற இரண்டு அக்னிகளும் பயன்படுத்தப் படுகின்றன. ஆனல் சிவாகமங்களை அனுசரித்துச் செய்யப்படும் கும்பாபிஷேகம் முதலிய கர்மங்களில் பாலாக்னி, யௌவனக்னி, விருத்தாக்னி தக்ஷிணக்னி, கார்ஹபத்யாக்னி, ஆகவனீயாக்னி, கேவலாக்னி,

சாமான்யாக்னி, சிவாக்னி என்ற பெயருடன் ஒன்பது அக்னிகள் உபயோகப்படுகின்றன.

ஜ்வாலையுடன் எரிவதிலோ, உஷ்ணகுணத்துடன் விளங்குவதிலோ பிரகாசப்படுத்துகிற தன்மையிலோ நம்முடைய பொறிகளுக்கு அக்னியில் வேற்றுமை தெரியாவிடினும், அந்த அக்னியில் மந்திரபூர்வமாகச் செய்யப்படும் ஸம்ஸ்காரங்களால்தான் அவற்றை வேறுவேறு அக்னிகளாகக் கொள்ளுகிறோம் என்பதை ஈண்டு நினைவிற் கொள்ளவேண்டும்.

ஒருசமயம் அக்னி பகவான், தேவர்களுக்கு வேலைக்காரனைப் போல உணவு தூக்கிக்கொண்டு கொடுக்க விருப்பமில்லாமையால் நீரில் மறைந்துகொண்டான். உணவு வராமல் போகவே தேவர்கள் அக்னியைத் தேடலாயினர். தேவர்கள் குளத்தின் அருகில் வந்தபொழுது அங்கே நீரில் வாழ்ந்த மீன்கள் அக்னி நீரில் மறைந்து இருக்கிறான் என்பதை தேவர்களுக்குத் தெரிவித்தன. அதனால் சந்தோஷமடைந்த தேவர்கள் ''எங்களைப் போலவே உங்களுக்கும் கண்களில் இமைத்தலின்மை உண்டாகட்டும்'' என்று மீன்களுக்கு வரமளித்தனர். அதனால் சினமடைந்த அக்னியோ ''செம்படவரால் போடப்படும் தூண்டில் முள்ளில் மாட்டிக்கொண்டு மரிப்பீர்கள்'' என்று மீன்களைச் சபித்ததாகவும் புராணம் கூறும்.

சுவேதாகி என்பவன் யானையின் துதிக்கைபோன்று நெய்தாரையைப்பெய்து வேள்விசெய்தான். அந்த நெய்யை ஜீரணம் செய்யமுடியாமல் அக்னி பகவானுக்கு அஜீரணத்தால் உடல் நலக்குறைவு உண்டாயிற்று. அதற்கு மருந்து காண்டவ வனத்தில் இருப்பதை அறிந்தான். அந்தக் காண்டவ வனம் இந்திரனுடைய பாதுகாப்பில் இருந்தமையால் அம்மருந்தை அக்னியால் உண்ணமுடியவில்லை. கிருஷ்ணன் அர்ஜுனன் இவ்விருவருடைய உதவியால் காண்டவவனத்தை எரித்தான். அக்காலத்தில் காட்டைக்காக்க வந்த இந்திரனை தன்னுடைய தந்தை என்றும் பாராமல், இந்திரனைத் தடுத்து காண்டவ வனத்தை அக்னிபகவான் உண்ணும்படி செய்தான். தனக்கு உதவிய அர்ஜுனனுக்கு காண்டீவம் என்ற வில்லை கொடுத்தான். இந்த வில்லே அர்ஜுனனுக்குப் பாரதப் போரில் பெரும் வெற்றிகளை அளித்தது. கடைசியில் பாண்டவர் சுவர்க்கம் போகும்பொழுது, அக்னியே அவ்வில்லை அர்ஜுனனிடமிருந்து வாங்கி ஒடித்து எறிந்தான் என்றும் பாரதம் கூறும். மேலும் காண்டவவனத்தை எரிக்கும்போது தக்ஷகனுடைய

பிள்ளை அச்வசேனனை எரிக்காமல் காண்டவவனத்தினின்றும் உயிருடன் வெளியில் செல்ல விட்டபடியால் "நிலையற்றவனாக ஆவாய்" என்று கிருஷ்ணனால் சபிக்கப்பட்டதாகவும் பாரதம் கூறும்

மகாகவி காளிதாஸன் குமாரசம்பவம் என்னும் காவியத்தில், சிவபிரானும் பார்வதியும அந்தப்புரத்தில் நெடுநாள் புணர்ச்சியில் ஈடுபட்டிருந்தனர். நெடுநாட்கள் ஆகியும் ஸேனாதிபதியை விரும்பும் தேவர்களுக்கு பார்வதியினிடம் புத்திரன் உண்டாகாமல் இருந்தபடியால், அக்னியை புறு வேடத்தில், அந்தப்புரத்துள் செல்லுமாறு தூண்டினர். அப்பொழுது வேறு ஒருவன் உள்ளே வந்தமையால் சினமடைந்த பார்வதி "त्वं सर्वभक्षो भव" (குமா 9 16) நீ சுத்தமானது அசுத்தமானது ஆகிய எல்லாவற்றையும் புசிப்பவனாக ஆவாய் எனச் சபித்தாள் என்று அக்னிக்குச் சாபமுண்டானதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் பூவாளூர் புராணம் "புறுவாகி கல்லைத் தின்று சகோதரதனை புணர்வாய்" என சபிக்கப்பட்டதாகக் கூறும்.

பிருகுவின் மனைவியான புலோமை என்பவளைக் கவர ஒரு ராக்ஷஸன் வந்தான். ஆச்ரமத்தில் பிருகு பத்னி மறைந்திருந்தாள். அங்கு இருந்த அக்னியை ராக்ஷஸன் கேட்டான். ராக்ஷஸனுக்கு பயந்த அக்னி பிருகு பத்னியை ராக்ஷஸனுக்குக் காட்டிக்கொடுத்தான். அரக்கன் அவளைக் கவர்ந்து சென்றான். அப்பொழுது அவளுடைய கருவிலிருந்த குழந்தை நழுவிக் கீழே விழுந்தது. அக்குழந்தை ச்யவனன் என்று பெயர்பெற்றான். அக்னி காட்டிக்கொடுத்தமையால்தான் அரக்கன் அவளைக் கவர முடிந்தது என்பதை அறிந்த பிருகு முனிவர் "நீ சுத்தம், அசுத்தம் எல்லாவற்றையும் புசிப்பவனாவாய்" என்று சபித்ததாக பாரதம் ஆதிபர்வம் கூறும். சபிக்கப்பட்ட அக்னி வருந்திய பொழுது 'எதைப் புசித்தாலும் நீ சுத்தன்" என்று பிர்மா வரம் கொடுத்ததாகவும் உள்ளது.

விருத்திராசுரனைக் கொன்று, அந்த பிர்மஹத்தி தோஷத்திற்குப் பயந்து ஒளிந்திருந்த இந்திரனிடம், நகுஷன் இந்திர பதவியேற்று இந்திராணியை விரும்புவதைத் தெரிவித்து, இந்திரன சொல்லிய யுக்திகளைச் செய்து இந்திராணியைக் காத்தபடியால் மகிழ்ந்த இந்திரன் வேள்விகளில் தன்னுடன் ஹவிர்பாகம் பெறும் பேற்றை அக்னிக்கு வரமாக அளித்ததாகப் பூவாளூர்ப் புராணம் கூறும்.

ஒருசமயம் அக்னி தேவர்களிடம் கோபம்கொண்டு கபிலைப் பசுவின் வயிற்றில் ஒளிந்து கொண்டான். அப்பசுவைத் தேவர்கள் வேண்டி அக்னியின் நிலையறிந்தனர். பிறகு அக்னியைச் சமாதானப்படுத்தி அழைத்துச்சென்றதுமன்றி அக்னியை வயிற்றில்வைத்துக் காத்தமையால் "நீ புண்யதேஹியாக இருப்பாய்" என்று பசுவிற்கும் வரமளித்தனர் என்று காஞ்சிப் புராணம் கூறும்.

வேள்வியில் தனக்குத் தகாத ஹவிசைக் கொடுத்தமையால் கோபம் கொண்டு மூங்கில் புதரில் அக்னி மறைந்தான். தேடிய தேவர்களுக்கு யானை காட்டிக்கொடுத்தது. அதனால் கோபங் கொண்ட அக்னி யானைகளைக் கொம்பிழக்கச் சபித்தான். பிறகு அரசமரத்தில் மறைந்த அக்னியை கிளி காட்டிக் கொடுக்கவே "தெளிவற்ற பேச்சுடையவர் ஆவீர்" என அக்னி கிளிகளைச் சபித்து நீரில் ஒளிந்தான். அங்கும் தவளைகளால் காட்டப் பட்டான். அவைகளையும் நாவிழக்கச் சபித்தான் என்று புராணம் கூறும்.

பதினெட்டுப் புராணங்களில் அக்னியால் கூறப்பட்ட ஆக்னேய புராணமும் ஒன்று. அக்னி பகவான் பூசித்தமையால் கொள்ளிக்காடு, வன்னியூர் இவை அக்னியின் பெயருடன் விளங்குகின்றன. திருவண்ணாமலை பஞ்சபூத க்ஷேத்திரங்களில் தேயு (அக்னி) க்ஷேத்திரமாகக் கூறப்படும். அகத்தியான்பள்ளி, இராமேச்சுரம், வன்னியூர், திருவெண்காடு, விளமர் என்ற க்ஷேத்திரங்களில் அக்னி தீர்த்தம் பிரசித்தமானது. அக்னிக்குக் கலைகள் பத்து என்பது

धूम्रार्चिरूष्मा ज्वलिनी ज्वालिनी विस्फुलिङ्गिनी ।
सुश्रीः सुरूपा कपिला हव्यकव्यवहे अपि ॥
यादीनां दशवर्णानां कला धर्मप्रदा अमूः ।

என்ற ஸ்மிருதி வாக்யத்தால் உணரப்படும். அக்னியின் பட்டணத்திற்கு தேஜோவதி என்ற பெயர் ஆகமங்களில் கூறப் படுகிறது. மத்ஸ்யபுராணம் 231 ஆவது அத்தியாயத்தில் அக்னி வைகிருத்யம் (அக்னியின் இயற்கைக்கு மாறுபாடுகள்) கூறப்பட்டிருக்கின்றன. அம்மாறுபாடுகளால் உண்டாகும் கெடுதல்கள் புராணங்களிலும், ஜ்யோதிட நூல்களிலும் கூறப் படும். வாயுபுராணம் 74ஆவது அத்தியாயத்தில் ஸப்தார்ச்சிர் மந்திரம் (அக்னி மந்திரம்) கூறப்படுகிறது. அக்னி பீஜம் ரँ என்பது.

(தொடரும்)




வேதாந்த சிரோமணி,

**பிர்மஸ்ரீ. K. இராஜகோபால சாஸ்திரிகள்**

( மலர் 29, இதழ் 10, பக்கம் 559 இன் தொடர்ச்சி )

वैश्वानराय विद्महे लालीलाय धीमहि ।
तन्नो अग्निः प्रचोदयात् ॥ என்பது அக்னி காயத்ரீ.

சூரிய ஒளி மிகுதியாக உள்ள பகற்காலத்தில் அக்னி அதிகம் பிரகாசமாகத் தெரிவதில்லை. சூரியன் இல்லாத இரவு நேரங்களில் அதிகப் பிரகாசமாகக் காணப்படுகிறான்.

सौरं तेजः सायमग्निं संक्रमते ।
आदित्यो वा अस्तं यन्नग्निमनुप्रविशति ॥
अग्निं वा आदित्यः सायं प्रविशति ।

என்ற வேதவாக்யங்கள் சாயங்காலம் சூரியன் அக்னியுள் நுழைந்துகொள்ளுகிறான் என்பதைத்தெரிவிக்கின்றன. "दूरान्नक्तं ददृशे" என்ற வேதவாக்யம் அதன் காரணமாகவே இரவில் தொலைவிலிருந்தும் அக்னி காணப்படுகிறான் என்றும் கூறுகிறது. இதைக் காளிதாஸ மகாகவியும்

स राज्यं गुरुणा दत्तं प्रतिपद्याधिकं वभौ ।
दिनान्ते निहितं तेजः सवित्रेव हुताशनः ॥

என்று திலீபனிடமிருந்து இராஜ்யத்தை அடைந்த ரகுவிற்கு, சூரியனிடமிருந்து ஒளியைப்பெற்று அதிகமாகப் பிரகாசிக்கும் அக்னியை உபமானமாகக் கூறுகிறார்.

வேதங்களில் சொல்லப்படும் யாகங்களில் அதிகமாக ஹவிர் பாகம் பெறுகிறவன் இந்திரன். இந்திரனுக்கு அடுத்தபடியாக

அக்னியே அதிகமாக ஹவிர்பாகம் பெறுகிறவன். ரிக் வேதத்தில் ஒவ்வொரு மண்டலத்தின் ஆரம்பத்திலும் அக்னியே வர்ணிக்கப் படுகிருன். சுமார் 200 ரிக்குகளுக்கு அதிகமாகவே அக்னிக்கு உள்ளன.

மேலும் ஹவ்யவாஹன், கவ்யவாஹன், ஸஹரக்ஷா என்று மூன்று பிரிவாக அக்னி கூறப்படுகிருர். தேவர்களுக்கு ஹவிஸைக்கொண்டு கொடுக்கும் அக்னி ஹவ்யவாஹன் என்றும் பிதிர்களுக்குக் கொண்டு கொடுக்கும் அக்னி கவ்யவாஹன் என்றும் அசுரர்களுக்கு ஹவிசைக் கொண்டு கொடுக்கும் அக்னி ஸஹரக்ஷா என்றும் பெயர்பெறுவர் என்பதை

"त्रयो वा अग्नयो हव्यवाहनो देवानां कव्यवाहनः पितॄणां
सहरक्षा असुराणाम्"

என்ற வேத வாக்கியம் உணர்த்தும்.

சிராத்தங்களிலும். வேள்விகளிலும் பிதிர்க்களுக்கும் தேவர்களுக்கும் ஹவிசைக் கொடுப்பதுண்டு. அசுரர்களுக்கு ஹவிசு கொடுக்கும் வழக்கமோ விதியோ இருப்பதாகத்தெரியவில்லையே. அசுரர்களுக்கு ஹவிசைக் கொண்டு கொடுப்பவன் ஸஹரக்ஷா என்று பெயர் பெறுவன் என்பது எப்படிப் பொருந்தும் என்று சந்தேகம் தோன்றலாம். சொல்லப்பட்ட விதிமுறை தவறிச் செய்யப்படும், சிராத்தங்களிலும் வேள்விகளிலும இடப்படும் ஹவிசு அசுரர்களுக்கே உரியதாகுமாதலின், அதைக்கொண்டு கொடுக்கும் அக்னி ஸஹரக்ஷா என்பது பொருத்தமேயாகும்.

யாகங்களுக்கு அக்னியைக் கடைந்து உண்டுபண்ணுதல் வேண்டும் என்று விதி. வன்னி மரத்தின் இரண்டு கட்டைகளை எடுத்து ஒன்றின்மேல் ஒன்றைப் பொருத்தி தயிர் கடைவது போல் கடைந்தால் அக்னி உண்டாகும். அக் கட்டைகளுக்கு அரணி என்று பெயர். இதை வேதம் अरण्योर्निहितो जातवेदाः என்று கூறுகிறது. வன்னி மரத்தில் அக்னி மறைந்திருக்கிறது என்பதைக் காளிதாஸன் "शमीमिवाभ्यन्तरलीनपावकाम्" அக்னியை உள்ளேயுடைய வன்னிமரம்போல், கருவுற்ற சுதக்ஷிணை இருந்தாள் என்று உபமான முகத்தால் கூறுகிருன். அரணியிலிருந்து பலத்தால் கடைந்து பெறப்பட்டமையால் "सहसस्पुत्रः" (பலத்தால் பெறப்பட்டவன்) என்ற பெயர் வேதத்தில் கூறப்படுகிறது. மேலும் முதலில் வருணிக்கப்பட்டபடியால் सनः श्रुतः என்றும், ஹோம காலத்தில் புகையுடன் இருப்பதால் धूमकेतुः என்றும், இல்லறம் நடத்த சிறந்த தலை

வன் ஆதலின் க்ருஹபதி: என்றும் செல்வம் பெறக் காரணமாதல் பற்றி ரயீணாம் பதி: என்றும் பற்பல பெயர்களால் கூறப்படுகிறான்.

ஆகமங்களில் கூறப்படும் ஒன்பது அக்னிகளின் ஸ்வரூபமும் இடமும், குண்டமும் வருமாறு:

1. ஒருமுகமும், மூன்று கண்களும், மூன்று பாதங்களும் உடையவராய், அக்ஷமாலை, சூலம், ஸ்ருக் இவற்றை வலது கைகளிலும், அங்குசம், உடுக்கை, ஸ்ருவம் இவற்றை இடது கைகளிலும் தரித்துக்கொண்டு மஞ்சள் ஆடை அணிந்து, வேதிகையின் கிழக்கு திக்கில் உள்ள சதுரமான குண்டத்தில் சுகாஸனத்தில் இருப்பவராய் ஆஹவனீயாக்கினியைத்தியானிக்க வேண்டும். இவரை செந்நிறமுடையவராகக் கூறுவர்.

2. இரண்டு முகமும், பொன்னிறமும், மூன்று கால்களும், சக்தி வன்னி, சுருக், சுருவம், நெய்ப்பாத்திரம், தோமரம், விசிறி இவற்றைத்தாங்கிய ஏழு கைகளும், ஹிரண்யா முதலிய நான்கு நாக்குகளை வலது பக்கத்திலும், ஸுப்ரபா முதலிய மூன்று நாக்குகளை இடதுபக்கத்திலும் உடையவராய் அஜவாஹனத்தில் இருக்கும் தக்ஷிணாக்கினியை, வேதிகைக்குத் தெற்குப் பக்கத்தில் பிறைச் சந்திரன் போன்ற குண்டத்தில் தியானிக்க வேண்டும்.

3. இரண்டு கண்களும், வரத அபயமுத்திரைகளையுடைய இரண்டு கைகளும், உடையவராய் வெண்மையான ஆடையுடையவராய் ஸகலவித ஆபரணம் பூண்டவராய், தாமரை ஆஸனத்திலிருக்கும் கேவலாக்னியை வேதிகையின் வடக்கே தாமரைபோன்ற குண்டத்தில் தியானிக்கவேண்டும்.

4. வேதிகையின் மேற்கே வட்டமான குண்டத்தில் கார்ஹபத்யாக்னியை, சிவந்த அங்கமும் ஆடையுமுடையவராயும், வரத அபயமுத்திரைகளை உடையவராயும் மேல் இரண்டு கைகளில் சுருக் சுருவம் தாங்கியவராயும் ஒருமுகமும் ஏழு நாக்குகளுடன் கூடியவராயும், சடைதரித்தவராயும், குதிரையில் ஏறியவராயும் தியானிக்கவேண்டும்.

5. நான்கு கை, மூன்றுகண், ஒருமுகம் சடை இவற்றைத் தரித்துக்கொண்டு காளையின்மேல் ஏறிய விருத்தாக்கினி வெண்ணிறமுடையவர். நான்கு கைகளிலும் சூலம், பரசு (கோடாலி) வரதம் அபயம் இவற்றையுடையவர். இவர் வேதிகையின் தென் கிழக்கில் அரச இலைபோன்ற யோனி குண்டத்தில் தியானிக்கப் படுவார்.

6. இரண்டுமுகம், நான்கு கொம்பு, அபயம், சக்தி, சுருக், சுருவம், வரதம், கேடயம் அக்னி இவற்றை ஏந்திய கைகள் உடைய ஸாமான்யாக்கினியை வேதிகையின் வடகிழக்கேயுள்ள எட்டுப் பட்டையான குண்டத்தில் தியானிக்கவேண்டும்.

7. வேதிகைக்குத் தென்மேற்குத் திக்கில் முக்கோணமான குண்டம். விருஷபத்தில் ஏறிய யௌவனாக்னி இங்கு தியானிக்கப்படுவார். ஐந்து முகமும் மூன்று கண்களும், சிவந்த அங்கமும் உடையவர். வலது பக்கத்திலுள்ள ஐந்து கைகளில் சூலம், பரசு, கத்தி, அபயம், வஜ்ரம் இவற்றையும் இடது பக்கத்திலுள்ள ஐந்து கைகளில் உளி, பாசம், தாமரை, சக்ரம், வரதம் இவற்றையும் தரித்தவர் யௌவனாக்னி.

8. மும்மூன்று கண்ணுடைய இரண்டு முகமும், ஏழு நாக்குகளும், நான்கு கொம்புகளும் மூன்று கால்களும் செந்நிறமும் உடையவர் பாலாக்னி. இவர் காளையில் ஏறியிருப்பார். தோமரம், விசிறி, நெய்ப்பாத்திரம் இவற்றை ஏந்திய மூன்று இடது கைகளையும் சுருக், சுருவம், அக்ஷமாலை, சக்தி இவற்றை ஏந்திய நான்கு வலக்கைகளையும் உடையவர்.

9. வேதிகையின் தென்கிழக்கிற்கும், கிழக்கிற்கும் நடுவில் வட்டமான குண்டம். இதில் சிவாக்னி தியானிக்கப்படுவார். இவர் தாமரையில் இருப்பவர். ஐந்து முகம், பத்துக் கை, செந்நிறம் மூன்று கண்கள் உடையவர் சூலம், வஜ்ரம், கத்தி, பரசு, அங்குசம், கதை, தண்டம், பாசம், தாமரை, சக்ரம் இவற்றைக் கைகளில் தரித்தவர். ஏழு நாக்குகள் உடையவர். ஸ்வாஹா ஸ்வதா என்ற இரு மனைவியோடு கூடியவர். இவ்விதம் குண்டத்தில் சிவாக்கினியைத் தியானிக்க வேண்டும்.

இங்குக் கூறப்பட்ட அக்னிகளின் பெயரோ, திசையோ பிரதான மூர்த்தி எந்த தெய்வமாக இருப்பினும் மாறுவதில்லை. குண்டங்கள் பிரதான மூர்த்திக்கு ஏற்றவாறு மாற்றிக் கூறப்படும். தந்திர பேதத்தால் அக்னியின் ஸ்வரூபத்திலும் அணி, ஆயுதம், ஆடை முதலியன மாறிச் சில பேதங்கள் காணப்படுகின்றன. சிவாக்னி பிரதான அக்னி. தேவி யாகமாயின் ஸர்வ மங்களாக்னி என்றும் சுப்பிரமணிய யாகமாயின் குஹாக்னி என்றும் இம்மாதிரி பிரதான அக்னியின் பெயரையும் மாற்றிச் சிலர் கூறுகின்றனர். ஆனால் சிவாக்னிக்குரிய தியானாதிகளினாலேயே அந்தந்த அக்னியையும் தியானிக்கின்றனர்.

(தொடரும்)



# அக்னி

வேதாந்த சிரோமணி,

**பிர்மஸ்ரீ. K. இராஜகோபால சாஸ்திரிகள்**

( மலர் 29, இதழ் 11, பக்கம் 627 இன் தொடர்ச்சி )

மாகிஷ்மதிதேசத்தரசன் நீலத்வஜனுடைய பெண்ணை மணந்தவனும் கிருத்திகா நக்ஷத்திரத்திற்கு **அதிதைவமும்**, சுக்ரீவனின் சேனைத்தலைவனான நீலனுக்குத் தந்தையுமான அக்னி பகவானுக்கு ஓர் அஷ்டோத்திர சதநாமாவளி ஸ்தோத்திரம் உள்ளது. நாமாவளி மட்டும் எழுதப்படுகிறது :-

ओं अग्नये नमः
कृशानवे
ज्वलनाय
वीतिहोत्राय
धनञ्जयाय
विभावसवे
जातवेदसे
त्रिधाम्ने
मन्त्रदीधितये
स्वाहा स्वधापतये
वह्नये
शिखावते
श्रीप्रदायकाय
शमीगर्भाय
बृहद्भानवे
हिमारये
हव्यवाहनाय

ओं वैश्वानराय नमः
चित्रभानवे
राजन्याय
देवतामुखाय
सप्तहस्ताय
मन्त्रजिह्वाय
कुमारपरिपोषकाय
मरुत्वेष्टिप्राज्यहविःप्राश
नाजीर्तिसंगताय
खाण्डवप्राशनोल्लासाय
पार्थस्यन्दनचापदाय
शोचिष्केशाय
कृष्णवर्त्मने
रोहिताश्वाय
तमोपहाय
ज्वालायुधाय
वैजन्ताय

ओं उदर्चिषे नमः
अजिराप्रभवे
सर्वभक्षाय
वायुसखाय
चतुःश्रृङ्गाय
द्विशीर्षकाय
बर्हिषे
शुष्मणे
सप्तजिह्वाय
दहनाय
मेषवाहनाय
कृपीडयोनये
सप्तार्चिषे
हुतभुजे
तनूनपाते
द्विजदक्षिणहस्तस्थाय
क्षेत्रनेत्रसमाश्रिताय
ज्वालाजिह्वाय
देवदूताय
द्विजन्मोपास्यदैवताय
श्रुततीर्थाय
मन्दहासाय
कृष्णकौमोदकी प्रदाय
जुहुराणाय
पङ्क्तिराधसे
सहोजसे
वसवे
त्रिपदे
उषर्बुधाय
शुचये
सीतापातिव्रत्यप्रकाशकाय
हिरण्यरेतसे
दमुनाय
अर्चिष्मते

ओं पावकाय नमः
अनलाय
नीलध्वजसुताभर्त्रे
पाञ्चजन्याय
शिवायुधाय
अनेकरूपाय
त्रितनवे
उख्याय
तेजोवतीप्रभवे
धूमध्वजाय
जाग्रविदे
शर्वरीशाय
तुषग्रहाय
पुण्डरीकाय
शर्वफालनेत्रात्मने
मत्स्यशापदाय
श्रौतस्मार्तक्रियादक्षाय
कृत्तिकातार दैवताय
शुक्राय
परिज्ञाय
त्रेतात्मने
ऋणबाधानिवारकाय
वंश्याय
दक्षिणपूर्वेशाय
नीलताताय
नलेष्टदाय
पक्केलिमाय
आश्रयाशाय
नर्यापसे
आशुशुक्षणये
वाडवाय
च्छिन्दिराय
अर्काय
अस्त्रजिह्वाय

| | | | | |
|---|---|---|---|---|
| ओं | वायुसारथये | नमः | ओं | अरणिसम्भवाय नमः |
| | उष्णाय | | | कर्मब्रह्मस्वरूपाय |
| | विसर्पाय | | | ब्रह्मवर्चसदायकाय |
| | विश्वात्मने | | | |

அக்னியின் வழிபாடு மிகவும் வேண்டற்பாலது. அதன் காரணமாகவே அந்தணரில் பிர்மசாரிகள் தினம் காலையும் மாலையும் சமிதாதானமும், இல்வாழ்வார்கள் ஔபாஸனமும் செய்யவேண்டும் என்று விதித்தனர். பிர்மசாரிகள் சமிதாதான ஹோமத்தின் முடிவில் "यत्ते अग्ने तेजस्तेनाहं तेजस्वी भूयासं" என்று வேண்டுகின்றனர் (ஹே அக்னி உனக்கு யாதொரு தேஜஸ் உள்ளதோ அதனால் நான் தேஜஸ் உள்ளவனாகவேண்டும்) இல்லறத்தார்கள் ஔபாஸனத்தின் முடிவில்

अग्ने नय सुपथा राये अस्मान् विश्वानि देव वयुनानि विद्वान् ।
युयोध्यस्मज्जुहुराणमेनो भूयिष्ठां ते नम उक्तिं विधेम ॥

(நீ சகலமான வழிகளையும் அறிந்தவன். எங்களைச் செல்வம் பெறும்படியாக நல்வழியாக அழைத்துச்செல். எங்களைத் துன்புறுத்தும் பாபங்களைப் போக்கு கடைசிகாலத்தில் என்னால் நமஸ்காரம் செய்யக்கூட முடியாது ஆதலின் நமஸ்காரம் என்ற சொல்லை மிகுதியாகச் சொல்லுகிறேன்.) என்று கூறி அக்னியைப் பிரார்த்திக்கின்றனர். அக்னியை ஜ்வலிக்கும்படி செய்யச் சொல்லுகிற ரிக்கு ஸாமிதேனி. அல்லது தாய்யா எனப்படும். அக்னி பூசித்த திருப்புகலூரில் அக்னிபகவான் உருவம் உள்ளது.

आरोग्यं भास्करादिच्छेत् श्रियमिच्छेद्धुताशनात् ।
ज्ञानं महेश्वरादिच्छेन्मोक्षमिच्छेज्जनार्दनात् ॥

ஆரோக்யத்தை சூர்யனிடமிருந்தும். செல்வத்தை அக்னியினிடமிருந்தும் ஞானத்தைச் சிவபெருமானிடமிருந்தும், மோக்ஷத்தை திருமாலிடமிருந்தும் அடைய விரும்பவேண்டும் என்ற பழமொழிக்கு ஏற்ப, அக்னிக்கு रयीणां पतिः (செல்வத்திற்குத் தலைவன்) என்ற பெயர் வேதங்களில் கூறப்படுதலின் நாமும் அக்னியை வழிபட்டு இவ்வுலக வாழ்க்கைக்கு வேண்டற்பாலதான செல்வத்தைப் பெறுவோமாக.

---